"டெபிஸிட் பினான்ஸிங்". அது பெரிய பொருளாதார விஷயம். அதைப் பற்றி கனம் அங்கத்தினர் கூறுகிறார்கள் என்று நினைக்கிறேன். அதற்கும், கள்ள நோட்டு அச்சடிப்பதற்கும் சம்பந்தம் இல்லை என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

**Sri S. MUTHULINGAM**: பத்து ரூபாய் கள்ள நோட்டு அச்சடித்தது தேர்தலுக்கு முன்பா அல்லது பிந்தியா என்பதை கனம் அமைச்சர் அவர்கள் சொல்ல முடியுமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: போலீஸார் ஒருவர் குற்றம் செய்யாமல் இருக்கும்பொழுது கேஸ் போடுவதில்லை.

**Sri K. R. SAMBANDAM**: இம்மாதிரி அடிக்கடி கள்ள நோட்டுகள் தயார் செய்யப்படுவதால், அவர்களை பேரில் மிலிடரி கோர்ட்டு மார்ஷல் செய்வது போல், கடுமையான நடவடிக்கை எடுப்பதுபற்றி சர்க்கார் யோசிக்குமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: குற்றத்திற்கு தகுந்த தண்டனைகள் சட்டப்படி கொடுக்கப்படுகின்றன. தூக்கு தண்டனை விதிக்கப்படுகிற கொலை கேஸ் கூட நடந்துக்கொண்டுதான் இருக்கிறது.

### *Government Hospital (Kottagiri)*

* 43 Q.—**Sri J. MATHA GOWDER**: கனம் சுகாதார அமைச்சர் தயவு செய்து கீழ்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நீலகிரி ஜில்லா கோத்தகிரி சர்க்கார் ஆஸ்பத்திரியில் எத்தனை படுக்கைகள் இருக்கின்றன ;

(இ) படுக்கைகளை அதிகரிக்கும் உத்தேசமுண்டா ? விவரமென்ன ?

**The Hon. Srimathi JOTHI VENCATACHELLUM**: (*a*) Sixteen, Sir.

(*b*) The question of increasing the bed strength of the hospital from 16 to 50 is under consideration.

**Sri J. MATHA GOWDER**: கோத்தகிரி ஆஸ்பத்திரிக்கு படுக்கைகள் எத்தனையோ ஆண்டுகள் காலமாக எல்லா அமைச்சர்களிடமும் விண்ணப்பம் கொடுத்திருக்கிறார்கள். எப்பொழுதும் பரிசீலனையில் இருக்கிறது என்று பதில் மாத்திரம் வந்துக்கொண்டிருக்கிறது. கோத்தகிரியில் தாலூகா ஹெட்குவார்டர்ஸ் ஆஸ்பத்திரியையும் விட பெரியதாக இருக்கக்கூடிய நிலையிலே, தொழிலாளர்கள் சுற்றியிருக்கிற காரணத்தினால் அதிகமான நெருக்கடி ஏற்படுகிறது. 50 பெட், 60 பெட் போதாமல் 200 பெட் தேவையுள்ள அளவிலே அங்கு வியாதியஸ்தர்கள் இருப்பதன் காரணமாக, இதை கனம் அமைச்சர் அவர்கள் தனியாக பரிசீலனை செய்து, படுக்கைகளின் எண்ணிக்கையை அதிகரிப்பதற்கு சர்க்கார் முன் வருமா என்று அறிய விரும்புகிறேன்.

**The Hon. Srimathi JOTHI VENCATACHELLUM**: "பெட் ஸ்டெரெங்தை" அதிகரித்து போதுமான வசதி செய்வதற்காக வேண்டி. கட்டடத்தை "எக்ஸ்டெண்டு" செய்யவேண்டுமென்று "ப்ரபோஸல்" இருக்கிறது. "எக்ஸ்டென்ஷன்" ஆகி "அகாமடேஷன்" கிடைத்தவுடன் "பெட் ஸ்டெரெங்த்" அதிகப்படுத்தப்படும்.

**Sri A. THANGAVELU**: தலைவர் அவர்களே, திண்டிவனம் சர்க்கார் மருத்துவ மனையில் போதிய படுக்கை வசதி இல்லாததால் வியாதியஸ்தர்கள் திருப்பி அனுப்பப்படுகிறார்கள் என்பதை அரசாங்கம் அறியுமா ?

**Mr. SPEAKER**: The hon. Member may put a separate question.

7th May 1962]

**Sri J. MATHA GOWDER**: கட்டிட வசதி ஏற்பட்ட பிறகு தான் அங்கு படுக்கை வசதி செய்யவேண்டுமென்று கனம் அமைச்சர் அவர்கள் சொல்லுகிறார்கள். கட்டிட வசதி செய்வதற்காக எஸ்டிமேட் ஏதாவது தயார் செய்யப்பட்டிருக்கிறதா ? அப்படி தயார் செய்யப்பட்டிருக்கிறது என்றால், எப்பொழுது அந்தக் கட்டிடம் பூர்த்தியாகும் ? எஸ்டிமேட் இன்னும் தயாரிக்கப்படவில்லை என்றால், அரசாங்கம் எப்பொழுது எஸ்டிமேட் தயாரிக்கப்போகிறார்கள், எப்பொழுது கட்டிடம் கட்டி முடிக்கப் போகிறார்கள் ? எப்பொழுது அங்கு அதிகப்படி படுக்கை வசதி செய்து கொடுக்கப்படும் என்பதை தயவு செய்து தெரிவிக்க முடியுமா ?

**The Hon. Srimathi JOTHI VENCATACHELLUM**: 16-லிருந்து 50 ஆக படுக்கை வசதியை உயர்த்துவது உடனடியாக கவனிக்கப்படும். "எக்ஸ்டென்ஷன்" ஆகி, " அகாமடேஷன் " கிடைத்தவுடன் படுக்கை வசதி அதிகப்படுத்துவது என்பதைப் பொறுத்தவரைக்கும், அது " பார்ட் ஸ்கீமில் " வரும்.

### *Co-operative Central Bank (Salem district)*

* 44 *Q*.—Sri P. V. SRIRAMULU NAIDU
Sri R. S. VEERAPPA CHETTIAR : } Will the Hon. the Minister for Co-operation be pleased to state—

(*a*) whether there is any proposal to bifurcate the Salem District Co-operative Central Bank;

(*b*) if so, the stage at which the matter stands?

**The Hon. Sri N. NALLASENAPATHI SARKARAI MANRADIAR**: (*a*) Yes, Sir.

(*b*) the proposal is under examination.

**Sri R. S. VEERAPPA CHETTIAR**: இந்தக் கோரிக்கையானது எவரிடமிருந்து வந்திருக்கிறது என்று அறியலாமா ?

**The Hon. Sri N. NALLASENAPATHI SARKARAI MANRADIAR**: எந்தக் கோரிக்கை ?

Sir, I do not hear the question.

**Mr. SPEAKER**: The hon. Member will please put the question clearly.

**Sri R. S. VEERAPPA CHETTIAR**: பிரிவினை கோரிக்கை யாரிடமிருந்து வந்திருக்கிறது என்பதை அறியலாமா ?

**The Hon. Sri N. NALLASENAPATHI SARKARAI MANRADIAR**: இந்த போர்டு பிரிவினை வேண்டுமென்று கேட்கிறார்கள். அதுவுமில்லாமல் ரிஜிஸ்டிரார்கள் கான்பெரன்ஸிலே இதைப் பிரிக்கவேண்டுமென்று ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

**Sri M. P. VADIVELU**: அதே மாதிரி மத்திய பாங்குகளை பிரிப்பதற்கு அரசாங்கம் உத்தேசித்திருக்கிறதா என்று கனம் அமைச்சர் சொல்ல முடியுமா ?

**The Hon. Sri N. NALLASENAPATHI SARKARAI MANRADIAR**: அதாவது கோவை ஜில்லா, சேலம் ஜில்லா, மதுரை ஜில்லா ஆகிய மூன்று மத்திய பாங்குகளை பிரிக்கவேண்டுமாக இப்பொழுது யோசனை.

**Sri M. V. KARIVENGADAM**: அப்படி பிரிக்கப்படுவதற்குக் காரணம் என்ன ?

**The Hon. Sri N. NALLASENAPATHI SARKARAI MANRADIAR**: இப்பொழுது அதிகப் பணம் கொடுக்கல், வாங்கல் புழக்கத்தில் இருப்பதால் பெரியதாக இருக்கிறது, ஆகவே அதைப் பிரித்து செய்தால் சுலபமாக இருக்கும் என்ற முறையிலே செய்யப்படுகிறது.